ஒவ்வொரு தேசிய இனமும் தன் தலைவிதியை தானே தீர்மானித்துக் கொள்ளும் உரிமையை பெறவேண்டும். தேசிய இனங்களை எத்தகைய பலாத்கார நிர்பந்தத்திற்கும் உட்படுத்தக்கூடாது. ஜாரிஸ்ட் ருஷ்யா பல இனமக்களின் சிறைக்கூடம் ○*○

ஒடுக்கப்பட்ட மக்களினங்களின் விடுதலையை சாதிக்காமல் தொழிலாளி வர்க்கம் தன் விடுதலையை பெறமுடியாது ○*○ காலனிப் பிரச்னையை ஷோவனித்துவத்தின் கீழ்க் கோப்புக்குள்ளேயே வைதல் செய்து விடலாமென்று இக்கால வலதுசாரி சோஷலிஸ்ட்களின் தந்தையரான இரண்டாவது இண்டர்நாஷனலின் பிரதிநிதிகள், சர்வதேசங்களின் சமத்துவ உரிமையை ஷோவனித்துவ பீடத்துக்குப் பலி கொடுத்தார்கள் ○*○ காலனி விடுதலை என்றால் தேசங்களின் சுயநிர்ணய உரிமை என்றே பொருள் ○○○ காலனி மக்களின் தேச விடுதலைப் போராட்டமும், ஏகாதிபத்திய நாட்டின் தொழிலாளி வர்க்கம் சமுதாய விடுதலைக்காக நடத்தும் போராட்டமும், பொது விரோதியை எதிர்த்து நடைபெறும் போராட்டமாகும் ○*○ இது காலனி மக்கள் தொழிலாளி வர்க்கத்தின் துணைப்படையாக விளங்குகிறது ○*○ முதல் யுத்தத்திற்குப் பிறகு 125 கோடி காலனி மக்களும் அரைக்காலனி சார்ந்து நிற்கும் 25 கோடி மக்களும் மொத்தம் 150 கோடி மக்கள் உலகத்தின் பெரும்பாலோர் 25 கோடி மக்கள் வாழும் நாடுகளால் ஒடுக்கப்படுகிறது என்றால் ○*○ காலனி நாடு சார்பு நாடுகளிலுள்ள மக்களை கொள்ளையடிக்கும் சலுகையை ஏகாதிபத்திய வாதிகள் விட்டுக் கொடுக்க மாட்டார்கள் ○*○ பெரும்பான்மையின் சுதந்திர மறித்துவிட்டு, அந்த இறைக்கும் மன்னன் இன்னமும் நேரடியாக ஏகாதிபத்தியவாதிகள் திரண்டு வருகிறார்கள் ○*○ ஏகாதிபத்திய நாடுகளின் கம்யூனிஸ்ட்கள் காலனிகளுடைய விடுதலை இயக்கங்களுக்கு உறுதியாகவும் தீவிரமாகவும் ஆதரவு அளிக்கவேண்டும். குறுகிய தேசிய வாதத்தை எதிர்த்தும் போராட வேண்டும் ○*○ சோஷலிஸத்துக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் நிற்கும் சுமார் 80 கோடி மக்களை ஆதரவு நிதியாகத் திரட்டி விட்டது ○*○ இந்தியாவில் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான ஜனநாயக முன்னணி உருவாகிக் கொண்டிருக்கிறது ○*○ காலனி மக்களின் விடுதலைப் போராட்டங்களை ஒடுக்க ஏகாதிபத்திய வாதிகள் ஆயுத பலத்தை மட்டும் பயன்படுத்தவில்லை. விடுதலைப் போராட்ட அணியை உடைக்க துரோகிகளை கூட பயன்படுத்திக் கொள்கிறார்கள் ○*○ எப்பொழுதுமே ஏகாதிபத்தியத்துக்கு உதவி வந்த மெல்லிய மேல்தட்டை ஏகாதிபத்திய பொம்மைகளாக நின்று பாக்கிஸ்தானில் அரசுபுரிகிறது ○*○ பிரிட்டனிலும், பிரான்ஸிலும், ஹாலந்திலும், ஜனநாயக சோஷலிஸ்ட்கள் அமெரிக்க-பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் கையாட்களாக நின்று காலனி மக்களின் போராட்டத்தை எதிர்க்கிறார்கள் ○*○ இந்தியா ஏகாதிபத்திய பிடிப்பிலிருந்து விடுபட்டு, சோஷலிச, மக்கள் ஜனநாயக நாடுகளின் குடும்பத்தில் சேரும் நாள் தூரத்திலில்லை அந்நாள், உலக ஏகாதிபத்தியத்தின் அஸ்தமன நாளாகும் ○*○

அசுர என்பதே அரசு என்பதின் திரிபே. ஆரியர்கள் இந்தியாவுக்கு வரும் போழ்து அரசுமுறை கண்டதில்லை. இங்கு அரசுமுறையுடன் வாழ்ந்த மக்களை அரசுகள் என்றழைத்தார்கள். பின்னர் "அரசு அசுர" வென்று திரிபு கொண்டது. தசை சதையாகத் திரிந்ததைப் போல ○*○ அரசன் தவறே செய்ய மாட்டான் என்பது முடியாட்சியின் தத்துவம். காங்கிரஸ் தவறே செய்யாது என்பது ராம்ராஜ்ய தத்துவம் ○*○

சர்வதேச பொருளாதார மாஸ்கோ மகாநாடு; அந்த மகாநாட்டின் நோக்கம் மாறுபட்ட பொருளாதார அமைப்புகளுக்குள் சமாதானமான ஒத்துழைப்பை ஏற்படுத்தி அமைதியை உறுதி செய்வதேயாகும் ○*○

அதி அற்புதமான தீர்க்க தரிசனம் புரட்சியின் போதுதான் பரிபூரணமாக ஜொலிக்கத் தொடங்கும். புரட்சி வெடித்தெழும் போதுதான் அவர் உண்மையாகவே தீர்க்கதரிசியாக மலர்ச்சியுறுவார். வர்க்கங்களின் போக்கையும் புரட்சியின் நெளிவு சுழிவுகளையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல புரிந்துக் கொள்வார் ○*○